


# சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை

# வாழ்க்கையும் வனப்பும்



அந்தமான் தீவுகளில் காடுகள் அடர்ந்த பகுதியொன்றில், வெட்டு மரங்களை அப்புறப்படுத்தும் வேலையில் யானையொன்று உதவுவதைப் படத்தில் காணலாம்.

வங்காளக் குடாக் கடலில் அமைந்துள்ள அந்தமான் நிக்கோபார் தீவுகளில் 90 சதவிகிதத்துக்குமேற்பட்ட நிலப்பகுதி காடுகள் அடர்ந்த பிரதேசமாகும். எனவே இப்பகுதியில் பொருளாதார நடவடிக்கைகளின் பெரும் பகுதி வனங்கள், வனப்பொருள்கள் ஆகியவற்றின் உபயோகத்தை ஒட்டியதாக அமைந்துள்ளது. இத்தீவுகளில் வாழும் மக்கள், வனத்துறையை அடிப்படையாகக் கொண்ட செழிப்புமிகுந்த வர்த்தகத்தை வளர்த்திருப்பதுடன், வெட்டுமரம், கயறு, இதர வனப்பொருள்கள் ஆகியவற்றை மூலப் பொருளாகக் கொண்டு அமைந்த பல்வேறு கைத்தொழில்களையும் அபிவிருத்தி செய்துள்ளனர்.

## தொழிற் கல்வி

அமைச்சர் கனம் பக்த
வத்சலம் கல்வி ஸ்தாபனத்
தின் ஆதரவில் சென்ற
வாரம் தொழிற் பள்ளிக்
கூடம் ஒன்று (பக்தவத்
சலம் பாலிடெக்னிக்) காஞ்
சீபுரத்தில் துவங்கப்பட்
டது. இந் நிகழ்ச்சிக்கு
தலைமை தாங்கிய நமது
மாநில முதலமைச்சர் கனம்
கே. காமராஜ் அவர்கள்
பேசுகையில், திரு. பக்த
வத்சலம் தமிழ் நாட்டில்
சிறந்த தேச பக்தரென்றும்,
அவர் பெயரால் ஆரம்பிக்
கப்படும் தொழில் பள்ளிக்
கூடம் மேலும் மேலும் வளர
வேண்டுமென்றும், மக்கள்
பொருளாதார முன்னேற்றம்
தொழில்கள் மூலம் தான்
ஏற்பட வேண்டுமென்றும்
இதற்குத் தொழில் பள்ளிக்
கூடங்கள் அவசியமென்
றும் குறிப்பிட்டார்.

தொழிற்கல்வி பள்ளி
யைத்திறந்து வைத்த நமது
கல்வி, நிதி அமைச்சர்
கனம் சி. சுப்ரமணியம்
அவர்கள் தமது சொற்பொழி
வில் கூறியதாவது:—
திரு. பக்தவத்சலம் சுதந்
திரப் போராட்டத்தில்
சிறை சென்று சிரமப்பட்ட
வர். இப்போது சர்க்காரிலு
சிறந்த சேவை புரிந்து வரு
கிறார். அவர் பெயரால் இ
போது இப்பள்ளி திறக்க
படுவது வரவேற்கத்தக்கது
தொழில் பள்ளிகள் ராஜ்ய
தில் இப்போது 18 இரு
கின்றன. இன்னும் இரண்
வட ஆற்காட்டிலும் கன்ன
யாகுமரியிலும் இவ்வ
ஷமே ஆரம்பிக்கப்படு
இவை தவிர ஏழு தொழி
கல்லூரிகள் உள்ள
தொழில் பள்ளிகளா
ஆர்ட்ஸ் கலாசாலைக
பாதிக்கப்படலாம் என
சிலர் பயப்படக்கூடும்
அவை பாதிக்கப்பட்டாலு
பரவாயில்லை. வேலையி
லாத் திண்டாட்டத்
ஒழிக்க தொழில்கள் பெரு
வேண்டும். ஏழ்மை ஒழிய
வேண்டும். மக்களுக்கு
புதிய வாழ்க்கை உதயமா
வேண்டும். இதுவே எங்க
நோக்கம்.

# சோவியத் கண்காட்சி

தேசப் பொருளாதாரத்தின் சாதனைகளை எடுத்துரைக்கும் சோவியத் யூனியன் கண்காட்சி, ஜூன் 16-ந் தேதி மாஸ்கோவில் ஆரம்பமாயிற்று. பௌதீகப் பொருளுற்பத்தி, விஞ்ஞானம், கலாச்சாரம் ஆகியவற்றின் சகல துறைகளையும் தழுவியதாக அமைந்துள்ள முதல் கண்காட்சி இதுவே. தொழில் கண்காட்சி, விவசாயக் கண்காட்சி, நிர்மாணத்துறை கண்காட்சி இம் மூன்று பழைய கண்காட்சிகளின் இடத்தை இந்த ஒரு கண்காட்சி மட்டும் பூர்த்தி செய்கிறது. 71 மண்டபங்கள் உள்பட பல்வேறு வகைப்பட்ட கட்டிடங்களைக் கொண்டு அமைந்துள்ள இக்கண்காட்சி, 580 ஏக்கர் பரப்புடைய இடம் பூராவையும் அடைத்துக் கொண்டுள்ளது.

கண்காட்சியின் "பிரதான மண்டபம்", சோவியத் மக்கள் கண்டுள்ள சகாப்தகரமான வெற்றிகளைச் சித்திரிக்கிறது.

இங்கு மின்சார விளக்குகளால் குறிப்பிட்டுக் காட்டப்பட்டுள்ள சோவியத் யூனியனின் மின்சார வசதிகள்" என்ற தேசப் படமும், "சோவியத் யூனியனில் இயந்திரத் தொழில்கள், போக்குவரத்து சாதனங்களின் வளர்ச்சி" என்ற தேசப்படமும், "சோவியத் யூனியனின் கட்டிடத் தொழில்" என்ற வரைகோட்டுப் படமும், "சோவியத் யூனியனின் எரிபொருள் தொழில்" என்ற மற்றொரு வரைகோட்டுப் படமும், "சோவியத் உழைப்பாளி மக்களின் வாழ்க்கைத்தர உயர்வும் கலாச்சார வளர்ச்சியும்" என்ற பிரிவும் எல்லோரது கவனத்தையும் கவருகின்றன.

"சமாதானத்திற்காக அணு சக்தி" என்னும் மண்டபத்தில் யுரேனியம்-கிராபைட் அடுக்குடன் கூடிய 4 லட்சம் கிலோவாட் அணு மின்சார நிலையமும், வாயுவால் குளுமைப்படுத்தப்பட்ட கனநீர் அடுக்குடன்கூடிய $1\frac{1}{2}$ லட்சம் கிலோவாட் நிலையமும் எவ்வாறு இயங்குகின்றன என்பதைக் காட்டும் மாதிரிகள் வைக்கப்பட்டுள்ளன. இவைகளிலிருந்து அரிய தகவல்களைப் பெற முடிகிறது.

"சோவியத் யூனியன் விஞ்ஞானப் பேரவை" மண்டபத்திலுள்ள காட்சிப் பொருள்களும் எல்லோரது கவனத்தையும் தம்பால் ஈர்க்கின்றன. இங்கு, வளிமண்டல ஆராய்ச்சிக்காகக் கையாளப்பட்ட வானிலை ராக்கெட்டுகளையும் பூபௌதீக ராக்கெட்டுகளையும் நாம் முதற் தடவையாகக் காண்கிறோம். இதேபோல், சில கேள்வித் தொடர்களுக்கு பதிலளிக்கும் அதிவேக இயந்திரம் ஒன்றையும், புதிய டெலி-இயந்திரயியல் அமைப்புகளையும், மற்றும் பல சாதனங்களையும் இங்கு காணலாம்.

இயந்திரத் தொழில், போக்குவரத்து அரங்கின் முக்கிய துறைகள் யாவற்றிலும் சோவியத் மக்கள் கண்டுள்ள சாதனைகளை, 18 மண்டபங்களிலுள்ள காட்சிப் பொருள்கள் எடுத்துக் காட்டுகின்றன.

இந்தக் கண்காட்சியில் 73 பொருளாதாரக் கவுன்சில்களும், 15 அமைச்சகங்களும் நிர்வாக போர்டுகளும், 1,300 தொழில் நிலையங்களும், 350 ஆராய்ச்சிக் கழகங்களும் டிசைன் திட்டம் புனையும் கழகங்களும் பங்கு கொண்டுள்ளன. பொருளுற்பத்தித் துறையில் புதிய கண்டுபிடிப்புகளை உருவாக்கியவர்கள் பலர், தமது முறைகளையும் தாம் உருவாக்கிய சாதனங்களையும் இங்கு விளக்கிக் காட்டுகின்றனர்.

கண்காட்சியின் மண்டபங்களிலும் திறந்த வெளி அரங்குகளிலும் ஏறத்தாழ 36 ஆயிரம் காட்சிப் பொருள்களும், பல்வேறு இயந்திரத் தொழில் பிரிவுகளின் உற்பத்திப் பண்டங்களும் இவற்றில் குறிப்பாக பிளாஸ்டிக் சாமான்களும் செயற்கை முறைகளில் தயாரிக்கப்பட்ட பொருள்களும், தேவைப் பண்டங்களும்—இடம் பெற்றுள்ளன. ஆயிரத்திற்கு மேற்பட்ட இயந்திரங்களும், இயந்திரக் கருவிகளும், சுமார் 2000 கருவிகளும் சாதனங்களும், 500-க்கு மேற்பட்ட மாதிரிகளும் உள்ளன.

உதாரணமாக, "சோவியத் யூனியனின் மின்சார வசதிகள்" மண்டபத்தில் நாட்டின் மின்சார வளர்ச்சியின் சாதனைகளையும், [illegible] துறையில் [illegible] வாய்ப்புகளையும் கொண்ட மின்சார நிலையங்களையும், நீர் மின்சார ஜனனிகளையும், பெரிய எரிவாயு டர்பைன் நிலையங்களையும், மிகவும் நவநவீனமான மின்சாரக் கம்பி சாதனங்களையும், சுயமிக்க சூட்சமங்களையும் பற்றித் தெரிந்து கொள்ள முடியும்.

"ரேடியோ மின்னியல்" மண்டபத்திலுள்ள காட்சிப் பொருள்கள் மிகுந்த சிறப்பு வாய்ந்தவை. தொழில் துறை, போக்குவரத்து, விஞ்ஞானம், ஜெட் இஞ்சினியரிங் உள்ளிட்ட இஞ்சினியரிங், கப்பல் துறை, ரடார் துறை, செய்திப் போக்குவரத்து ஆகியவற்றின் பல்வேறு பிரிவுகளிலும், இதேபோல் கலாச்சாரத் துறையிலும் ரேடியோமின்னியல் எவ்வாறு பயன்படுத்தப்பட்டு வருகிறது என்பதைக் காட்டும் நிஜ உருவ இயங்கும் காட்சிப்பொருள்கள் பல, இங்கு வைக்கப்பட்டுள்ளன.

"சோவியத் யூனியன் போக்குவரத்து" மண்டபத்தில் பல ருசிகரமான இயங்கும் காட்சிப் பொருள்கள் வைக்கப்பட்டுள்ளன. விமானங்களும், ஹெலிகாப்டர்களும் இங்கு சோவியத் விமானயியல் இஞ்சினியரிங்கைப் பிரதிநிதித்துவப்படுத்துகின்றன.

"இயந்திரம் கட்டும்" மண்டபத்தில் கடைசல் இயந்திரங்கள், துளைபோடும் இயந்திரங்கள், அறவை இயந்திங்கள், புரோச்சிங் இயந்திரங்கள், கீர் இயந்திரங்கள் முதலியவற்றின் புதிய மாதிரிகள் பல வைக்கப்பட்டுள்ளன. திட்டக் கண்காணிப்புடன் கூடிய உலோக வேலை இயந்திரங்களுக்கு நிறைய இடம் ஒதுக்கப்பட்டுள்ளது. புதிய உலோக வேலை முறைகளும் முன்னேற்றகரமான தொழில் நுணுக்கங்களும் கூட இங்கு காண்பிக்கப்படுகின்றன. உலோக வேலையின் சகல துறைகளையும் இயந்திரமயமாக்கி சுய இயக்க சூட்சமங்களையும் தொடர் உற்பத்தி சுய இயக்க யூனிட்டுகளையும் உருவாக்குவதில் சோவியத் யூனியன் அடைந்துள்ள சாதனைகளை கண்காட்சி தெளிவாக எடுத்துக்காட்டுகிறது.

"இரசாயனத் தொழில்". "எண்ணெய், எரிவாயு" மண்ட

# மக்கள் நலனுக்கு

திட்டக் கமிஷனின் வேலைத் திட்ட மதிப்பீட்டு ஸ்தாபனம் மத்திய சமூக க்ஷேம நல போர்டின் க்ஷேமநல விஸ்தரிப்பு வேலைத் திட்ட நடைமுறைகளைப் பற்றி சமர்ப்பித்த மதிப்பீட்டு அறிக்கையில் காணப்படுகிற யோசனைகள்.

மாதர்களுக்காகவும் குழந்தைகளுக்காகவும் க்ஷேம நல நிலையங்களை ஏற்படுத்துவதின் அடிப்படைத் தத்துவம் சிறந்ததொரு தத்துவமாகுமென்றும், அந்த நிலையங்களில் சிற்சில குறைபாடுகள் காணப்பட்டபோதிலும் பொதுப்பட அவை நன்ருகப் பணியாற்றி வருகின்றனவென்றும் மத்திய சமூக க்ஷேம நல போர்டைச் சேர்ந்த க்ஷேம நல விஸ்தரிப்புத் திட்ட வேலைகளைப் பற்றிய மதிப்பீட்டு அறிக்கை கூறுகிறது.

அந்த போர்டு மேற்கொண்டு வருகிற வேலைகளை இன்னும் சிறந்த ரீதியில் ஒருங்கிணைப்பது சம்பந்தமாகவும் அந்த வேலைகளை அபிவிருத்தி செய்வது சம்பந்தமாகவும் அந்த அறிக்கையில் யோசனைகள் கூறப்பட்டிருக்கின்றன.

ஒரு திட்டத்துக்குள் அடங்கியிருக்கிற கிராமங்களின் எண்ணிக்கை குறைக்கப்பட்டு, சேவை சிப்பந்திகளின் எண்ணிக்கை நிலையங்களின் எண்ணிக்கையும் அதிகரிக்கப்பட வேண்டுமென்று அந்த அறிக்கை யோசனை தெரிவிக்கிறது. அப்படிச் செய்தால்தான் அந்த திட்ட வேலைகளின் கீழுள்ள எல்லா கிராமங்களுக்கும் கேந்திர கிராமங்களுக்குக் கிடைக்கிற அனுகூலங்கள் கிடைக்கும். கிராம ஊழியர்கள் எல்லா இடங்களுக்கும் சீக்கிரம் சென்று வருவதற்கு வசதியாக அவர்களுக்கென்று சில போக்குவரத்து சாதனங்களை ஒதுக்கிவைத்திருக்க வேண்டுமென்றும் அவ்வறிக்கையில் கூறப்பட்டிருக்கிறது. சில சிப்பந்திகள் ஒரே இடத்தில் தங்குபவர்களாகவும் சிலர் பல இடங்களுக்குச் செல்பவர்களாகவும் இருக்கவேண்டும். க்ஷேம நல, கல்வி வேலைகளில் ஈடுபட்டிருக்கிற இதர இலாகா ஒத்துழைப்புடன் இன்னும் அதிகமான அளவுக்கு விஸ்தரிப்பு சேவைகள் செய்யத் திட்டமிடப்படவேண்டும். அப்படிச் செய்தால் பெருமளவில் அதிகப்படியான செலவில்லாமல் அம்மாறுதல்களை மேற்சொள்ள முடியும்.

கிராம சேவிகைகளின் கீழுள்ள பாலர் சங்கங்கள் முதல் ஒன்று அல்லது இரண்டு ஆரம்ப வகுப்புப் போதனைகளை மேற்கொள்ளலாமென்றும் ஆயாக்கள் அவர்களுடைய மாமூல் தாய் சேய் பணி வேலைகளுடன் குடும்பக் கட்டுப்பாடுத் திட்டத்துக்கு உதவியாக இருப்பதோடு அவை சம்பந்தமான விளம்பரங்களிலும் ஈடுபடலாம்.

கிராமங்களிலுள்ள வேலைகள் ஒழுங்காக மேற்பார்வை செய்யப்படவேண்டும்மென்றும், வேலைகள் ஒழுங்காக நடைபெறுவதற்கு வசதியாகவும், கிராமங்கள் இல்லாமலிருப்பதற்காகவும் சிப்பந்திகளுக்கு ஒழுங்காகச் சம்பளம் கிடைப்பதற்கு ஏற்பாடு செய்யப்படவேண்டுமென்றும் அவ்வறிக்கையில் கூறப்படுகிறது.

திட்ட வேலை நிறைவேற்றக் கமிட்டியின் வேலைத் திறனை அபிவிருத்தி செய்வதற்கும், நெருக்கடிகளைத் தணிப்பதற்கும் வசதியாக, அக்கமிட்டியின் தலைவியை நியமிக்கும் வேலையை ராஜ்ய சமூக க்ஷேம நல ஆலோசனை போர்டுகளிலும் விட்டுவிடவேண்டுமென்று, எந்த ஒரு தலைவியும் ஒன்று அல்லது இரண்டு வருடங்களுக்கு அதிகமாக அப்பதவியை வகிக்கக்கூடாதென்றும், தலைவியின் பதவிக் காலம் முடிவதற்கு முன்னதாகவே புதிய தலைவி தெரிந்தெடுக்கப்பட வேண்டுமென்றும் அவ்வறிக்கை யோசனை கூறியிருக்கிறது. திட்ட வேலை நிறைவேற்றக் கமிட்டித் தலைவிக்குப் பின்வரும் யோக்கியதாம்சங்கள் இருக்கவேண்டும்.

1 இவர் மெட்ரிகுலேஷன் பரீட்சை தேறியவராக இருக்க வேண்டும்.

2 அவரின் வயது 30 முதல் 60 வயது வரையுள்ள வரம்புக்கு உட்பட்டதாக இருக்கவேண்டும்.

3 அவர் மற்றவர்களுடன் ஒன்ருக அமர்ந்து சாப்பிடுவது, தண்ணீர் அருந்துவது ஆகியவைகளில் தயக்கம் காட்டுகிற ஜாதி வேற்றுமை மனப்பான்மை கொண் உண்மையிலேயே உத்தியோக சார்பற்றவராக இருக்கவேண்டும்.

கேந்திர நிலையத்தை அமைப்பதில் திட்ட வேலை நிறைவேற்றக் கமிட்டிக்குச் சிறிது அதிக சுதந்திரமிருக்க வேண்டுமென்று அவ்வறிக்கை சிபாரிசு செய்திருக்கிறது. அந்த நிலையத்துக்குச் சொந்தமான கட்டடம் இருக்க வேண்டும். கிராம மக்களின் உதவியுடன் கட்டப்படுகிற அந்தக் கட்டடம் அங்கு வந்துபோகிற மாதர்களுக்கு ஒதுக்கமும் சௌகரியமும் உள்ளதாக அமைந்திருக்க வேண்டும். கட்டட வேலைக்காகக் கிடைக்கிற நன்கொடைகள் பற்றி பொது மக்களுக்குத் தெரிவிக்கப்படவேண்டும்.

சமூக விஞ்ஞானம் அல்லது சமூக சேவைகளில் பட்டப் படிப்பு அல்லது பட்டப் பிற்காலப் படிப்பு படித்துத் தேறியவர்கள் முக்கிய சேவகிகளாக நியமிக்கப்படவேண்டும். அவர்களுக்கு இன்னும் பதவி உயர்வுக்கும் சம்பள உயர்வுக்கும் இன்னும் அதிக வாய்ப்புகள் ஏற்படுத்தித் தரப்படவேண்டும். கிராமங்கள் நிறைந்த கேந்திரங்களிலும் வெகுதூரத்திலுள்ள கேந்திரங்களிலும் பணிபுரிகிறவர்களுக்கு அதிகப்படியான படி தர வேண்டும்.

கிராம சேவிகைகளின் வேலை, திறமை ஆகியவைகளை மேம்படுத்துவதற்கான பல்வேறு யோசனைகளையும் அந்த ஸ்தாபனம் தெரிவித்திருக்கிறது.

மெட்ரிக்குலேஷன் வகுப்பில் தேறி, சிறந்த சேவையும் புரிந்திருக்கிற கிராம சேவிகைகள் ஐந்து வருஷ சேவைக்குப் பிறகு முக்கிய கிராம சேவகிகளாவதற்கு வாய்ப்பிருக்க வேண்டும். எல்லா கிராம சேவையாளருக்கும் ஒரே விகிதச் சம்பளம் தரப்பட வேண்டும். வேலை நேரங்களைப் பற்றியும் விதி இயற்றப்படவேண்டும். இந்திய இதிகாச காவியங்களைப் பற்றி அவர்களுக்குத் தெரிந்திருப்பதோடு அவைகளை கிராமப் பெண்களுக்குப் படித்துக் காட்டவும் அவர்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும். கிராம மக்களிடையே சுகாதாரம், நோய் தடுப்பு முறை ஆகியவைகளைப் பற்றிய நவீன கருத்துக்களைப் பரப்புவதற்கான பயனுள்ள புஸ்தகங்களை அவர்களுக்குப் படித்துக் காட்டவும் அவர்களுக்குத் தெரியவேண்டும்.

எழுத்தறிவில் அக்கறையில்லாத வயதான மாதர்களுக்கு எழுத்தறிவிப்பதைவிட 14 வயதுக்கும் 20 வயதுக்கும் உட்பட்ட பெண்கள் விஷயத்தில் எழுத்தறிவிப்பு முயற்சியில் இன்னும் அதிக கவனம் செலுத்தப்படவேண்டுமென்று அவ்வறிக்கையில் கருத்துத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. கைத் தொழில், சமூக கல்வி ஆகியவை சுவாரஸ்யமாகவும் இருக்க வேண்டும்.

மத்திய, ராஜ்ய சர்க்கார்களின் க்ஷேம நல இலாகாக்கள், சுய அதிகார ஸ்தாபனங்கள் ஆகியவற்றுக்கிடையே ஒருங்கிணைப்பு இருக்க வேண்டியதன் அவசியத்தை அந்த அறிக்கை வற்புறுத்தியிருக்கிறது. அப்படிச் செய்வதன் மூலம் ஒட்டிக்கிரட்டி வேலையைத் தவிர்த்து, பணத்தையும் மிச்சப்படுத்துவதோடு சமூக க்ஷேம நல வேலைக்கு இன்னும் ஏராளமான நிதிகள் கிடைக்கும்படிச் செய்யலாம்.

சரியானபடி ஒருங்கிணைப்பு ஏற்பட்டால் பல்வேறு கள ஊழியர்களின் அனுபவங்களை அடிப்படையாகக் கொண்டு பல்வேறு க்ஷேம நல ஸ்தாபனங்கள் தயாரிக்கிற சஞ்சிகைகளுக்கு நல்ல பயன் கிடைக்கமுடியும்.



நாவலாசிரியர்

# ஹெமிங்வே

## வாழ்க்கை அனுபவம்

அமெரிக்காவில் இன்றுள்ள புனை கதை எழுத்தாளர்கள் ...ாவரையும் விடப் பேரும் புகழும் செல்வாக்கும் உள்ளவர் யார் ...ன்றால், அநேகமாக ஏர்னெஸ்ட் ஹெமிங்வேயைத்தான் சொல்ல ...வண்டும். அவருடைய எழுத்து நடையும், அவர் தம் கதை ...ளில் வேவ்வேறு பெயர்களில் உலவினாலும் அவை எல்லாவற் ...லும் ஒரே ஆள் போலவே தோன்றும் அவருடைய கதா ...ாயகனின் குணமும், அவருடைய மன நிலையும் பலரும் அறிந் ...வையே. அமெரிக்காவில் மட்டும் அல்ல. மொழி பெயர்ப்பு ...லமாக பல்வேறு நாடுகளிலும் அவருடைய எழுத்தின் சிறப்பு ...வ்வாறு தெரிந்திருக்கின்றது. ஹெமிங்வே தமது எழுத்தால் ...ட்டுமல்ல உள்ளக் கிளர்ச்சி ஊட்டும் தம்முடைய வாழ்க்கையா ...ம் பெயர் பெற்றவராவர். அமெரிக்க எழுத்தாளர்களில் இவர் ...ரு தனி. இவரைப் பற்றிச் சரியாய் அறியத் துணை செய்வதே இக் கட்டுரையின் நோக்கம்.

ஏர்னெஸ்ட் ஹெமிங்வே முதன் ...தல் வெளியிட்ட நூல்களுள் ...றப்பாகச் சொல்லக்கூடியது ...925-ல் தோன்றிய "இன் அவர் ...டைம் ("நமது காலம்") என்னும் ...றுகதைத் தொகுப்பாகும். ஹெமிங்வேயின் உளப் பாங்கை உய்த்துணர வேண்டுமானால் அந்த நூலை ஆராய வேண்டும். அந்தக் ...தைகளிலே அமைதி என்பது ...ருந்துக்கும் கிடையாது. அவற் ...ள் பாதிக் கதைகளில், நிக் ஆடம்ஸ் என்னும் பெயர் புனைந்த ஒருவர் வருகின்றார். அவர் சிறுவராயிருந்து பெரியவராக வளர்ந்த முறைப்படியே அக்கதைகள் வரிசையாய் வைக்கப்பட்டுள்ளன. அந்த நிக் ஆடம்ஸ் என்ற கதாபாத்திரத்தைப் பற்றி இது வரை யாரும் சரியாக அறியவில்லை. அவர் மிக முக்கியமான ஆள். அவருடைய இயல்பை ஆசிரியர் அக்கதைகளில் கவனமாகப் பலப்படுத்தியுள்ளார். நிக் ஆடம்ஸ் தோன்றும் அக்கதைகள் ஒன்றோடொன்று மிக்க தொடர்புடையனவாகும். அக்கதைகளில் முதல் கதையை ஊன்றிப் படித்து ஆராய்ந்தால் ஒருண்மை புலப்படும். ஹெமிங்வேக்கு அதில்தாம் விவரிக்கும் நிகழ்ச்சிகளைப் பற்றிக் கவலையில்லை; அவற்றையெல்லாம் கண்ட சிறு பையன் மனத்திலே அவை எவ்வாறு பதிந்தன என்பதுதான் ஆசிரியர் கவலை. அந் நிகழ்ச்சிகள் அப்பையனை ஒன்றும் செய்துவிடவில்லை என்றுதான் அச் சமயத்துக்குத் தோன்றும். ஆயினும் அவன் பெரியவனாக வளர்ந்தபின், ஆறாத வடுப்பட்டவனாகவும் மன உறுதி அற்றவனாகவும் ஆகி விடுகிறான். ஏன் அவ்வாறு ஆனான் என்பதற்கு ஹெமிங்வே இங்கொரு காரணம் காட்டுவதைப் பார்க்கிறோம்.

அதன் பின் நிக் ஆடம்ஸ் பல கதைகளிலே தோன்றுகின்றான்; கடைசியில் அவனைப் பற்றிச்சிறு "குறிப்பு" ஒன்று எழுதப்பட்டுள்ளது. நிக் ஆடம்ஸ் முதல் உலக யுத்தத்திற்குப் போய்விட்டான் என்றும், போன இடத்தில் காயப்பட்டான் என்றும், புண்பட்டவன் எதிரியோடு "தனியே சமாதானம்" செய்து கொண்டான் என்றும், தனது நாட்டுக்காகவேனும் வேறு எந்த நாட்டுக்காகவேனும் இனிச் சண்டை செய்வதில்லை என அவன் சண்டை செய்வதையே விட்டுவிட்டான் என்றும் அக் குறிப்பு கூறுகிறது. ஹெமிங்வேயைப் பற்றியும் அவரது எழுத்தைப் பற்றியும் சரியாக அறிய வேண்டுமானால், அதற்கு இந்தச் சிறு குறிப்பு எவ்வளவு உறுதுணையாகும் என்பதை எவ்வளவுதான் வற்புறுத்தினாலும் தகும்.

அதன் பின்னர் ஹெமிங்வே வெளியிட்ட இரண்டு சிறுகதைத் தொகுப்பு நூல்களில் ஐந்து கதைகளில் நிக் ஆடம்ஸ் தோன்றுகிறார். அதே பழைய ஆள்தான்; இவருடைய வாழ்க்கைக் குறிப்பிலே முன்னர் விடுபட்டதை இங்கே காண்கின்றோம்; ஆனால் ஆள் மாறாட்டம் இல்லை. உணர்வு மிக்கவர்; உள்ளதை ஒளிக்க மாட்டார்; வெளியே ஓடிச் சுற்றும் வேட்கை உடையவர்; துணிச்சலும் அதிகம்; நடுக்கமும் நிரம்ப உண்டு; இவர் தான் நிக் ஆடம்ஸ். இப்படிப்பட்ட குண சித்திரத்தை இன்னும் பல நூல்களிலே அடுத்தடுத்துக் காண்கின்றோம்; பெயர் மாறினாலும் ஆள் மாறவில்லை; எவ்வுருவில் தோன்றினாலும் இவர் 'ஹெமிங்வேயின் கதாநாயகன்' என்னும் மாறாத பெயர் நிலைத்துவிடுகிறது. இந்தக் கதாநாயகன் புண்பட்டவன்; இறுதியில் [illegible]க்கு முன், இவன் எண்ணற்ற [illegible]வ செத்துப் பிழைக்கக் காண்கின்றோம்; புண் மட்டும் ஆறுவதே இல்லை; ஹெமிங்வே இருந்து இவனைப்பற்றி எழுதிக் கொண்டிருக்கும் வரை, இப்புண் ஆறாது. இத்தகைய புண்பட்ட மனிதனுக்கு வாழ்க்கைக்கு வழி காட்ட ஒருவன் வேண்டாமோ? அப்படிப்பட்ட துணைவன் ஒருவனையும் ஹெமிங்வேயின் கதைகளிலே காணலாம். இந்தக் கதா பாத்திரம் ஹெமிங்வே அல்ல. (ஹெமிங்வேயின் கதாநாயகன்...)

...மும் அலங்கோலமுமான உலகில் மானத்தோடும் துணிவோடும் வாழ வழிகாட்டும் துணைவனான கதா பாத்திரம் சிறப்பாகப் புலனாவது ஹெமிங்வேயின் "தி ஓல்டு மேன் அண்ட் தி ஸீ" (கிழவனும் கடலும்) என்னும் நாவலில்தான். இவன், தான் பிடித்த மாபெரும் மீனைச் சுறாமீன்கள் பிடித்துக் கொண்டுபோய் விடவும், பொறுமை இழக்காமல், துணிவுடன் வீரனாக விளங்குகிறான். இதுதான் வாழ்க்கை என்றும், தோல்வி வருகின்றபோதும் துவளாமல் நன்னிலைமையில் இருக்க வேண்டும் என்றும் ஹெமிங்வே நம் காதிலே ஓதிச் சொல்வது போல் இருக்கின்றது.

ஆறாத புண்படுதல், தான் அறிந்த சமூகத்தினின்று அடியோடு பிரிந்து தனித்திருத்தல், துன்புற்ற நிலையிலும் துவளாமல் நிற்றல் — ஆகிய இம்மூன்று இயல்புகளையும் ஹெமிங்வே எழுதிய சிறப்பான பெருங்கதைகள் எல்லாவற்றிலும் காண்கின்றோம். இந்நூல்கள் பத்து ஆகும்.

1926-ல் ஹெமிங்வே வெளியிட்ட "தி டாரன்ட்ன் ஆஃப் ஸ்பிரிங்" என்பது ஷெர்வுட் ஆண்டர்ஸன் எழுதிய "டார்க் லாஃப்டர்" என்ற நாவலைப் பார்த்து எழுதியதாகும். ஹெமிங்வே எழுதிய எல்லாவற்றிலும் இது ஒரு தனி; இதற்கும் மற்றவைகளுக்கும் யாதொரு தொடர்பும் இல்லை; இதனைப் பலர் வாசித்ததும் இல்லை. அதே ஆண்டு அவர் வெளியிட்ட "தி ஸன் ஆல்ஸோ ரைஸஸ்" என்பதே அவருடைய முதல் நாவல். இதில் ஹெமிங்வேயின் கதாநாயகனை மீண்டும் காண்கின்றோம். ஜேக்பான்ஸ் என்னும் பெயர் புனைந்து வரும் இவனும் புண்பட்டவனே. இவனும் நடுத்தர வகுப்பாரின் வழக்கமான வழிகளை விட்டுவிட்டுச் சமூகத்தினின்று வெளியேறி விடுகின்றான்.

அடுத்தது 1929-ல் வெளியான "எ பேர்வெல் டு ஆம்ஸ்" என்னும் நாவல். காதலும் போரும் கலந்த கதை. கதாநாயகன் பெயர் இதில் லெப்டினட் பிரெடெரிக் ஹென்ரி. இவனும் நிக் ஆடம்ஸைப் போலப் போரிலே புண் படுகின்றான். (புண்பட்ட இடம் முழங்

([illegible] பக்கம் பார்க்க)

# கனிப் பொருள்

இந்தியா சர்வதேச மார்க்கெட்டுகளில் கனிப் பொருள்கள் ஏற்றுமதி விஷயத்தில், குறிப்பாக கனி மாங்கனீஸ் விஷயத்தில், பெரும் போட்டியைச் சமாளிக்க வேண்டியிருக்கிறதென்றும் அதனால் சர்க்கார் தரப்புத் தொழில் துறையிலும் தனியார் தரப்புத் தொழில்துறையிலும் இருப்பவர்கள் கடினமாக உழைத்து ஏற்றுமதியைப் பெருக்கும் விஷயத்தைப் பரிசீலிக்க வேண்டுமென்று யூனியன் சுரங்கங்கள் எண்ணெய் மந்திரி, ஸ்ரீ கே. டி. மாளவியா கனிப் பொருள் ஆலோசனை போர்டின் ஏழாவது கூட்டத்தில் பேசுகையில் வேண்டிக்கொண்டார். மந்திரியின் பிரசங்கத்தின் சுருக்கம் வருமாறு.

**நா**ம் வருஷா வருஷம் கூடும் போதெல்லாம் நமது பிரச்னைகள் வளர்ந்து கொண்டு போவதை உணருகிறோம்; ஏனென்றால், நாட்டின் இயற்கை ஆதார வசதிகள் அந்நாட்டின் பொருளாதார அபிவிருத்தியோடு இணைக்கப்பட்டிருக்கிறது. அதனால்தான் சென்ற சில வருஷங்களில் தொழில் துறையில் ஏற்பட்டிருக்கிற அபிவிருத்தி முன்னேற்றம் ஆகியவைகளின் அளவு 130 வருஷ காலமாக நமது கனிப் பொருள். தொழிலின் சரித்திரத்தில் ஏற்பட்ட முன்னேற்றத்தையும் அபிவிருத்தியையும் விட அதிகமாக இருக்கிறது. சென்ற வருஷ கனிப் பொருள் உற்பத்தியின் மதிப்பு 130 கோடி ரூபாயாகும். அந்தத் தொகை மிகப் பெரிய தொகையாகத் தோன்றியபோதிலும், நமது நாட்டின் விஸ்தீரணத்தையும் இங்கு வளர்ந்து வருகிற தேவைகளையும் கணக்குப் பார்த்தால் இன்னும் 10, 15 வருஷங்களில் அந்த அளவு ஐந்து, ஆறு மடங்கு பெருகியாக வேண்டும். அப்படி அதிகரிப்பதானது நமது நாட்டைத் துரிதமாக தொழில்மயமாவதற்கு மட்டுமின்றி நமக்கு மிகத் தேவையான அன்னியச் செலாவணியைச் சம்பாதிப்பதற்கும் அவசியமாகும்.

கனிப் பொருள் உற்பத்தியில் அதிகப்படியான லட்சிய அளவை அடைவதில் பல்வேறு தடங்கல்கள் இருக்கின்றன. அதற்கு, கருவிகள், சிப்பந்திகள் திருந்திய தொழில் நுட்ப முறைகள், அனுபவம் ஆகியவை தேவைப்படும். ஆனால் அந்த வேலைகளுக்குத் தேவைப்படுகிற சுரங்க நிபுணர்களின் எண்ணிக்கையைத் துரிதமாக அதிகப்படுத்துவதற்கு வேண்டிய போதிய கவனத்தை நாம் செலுத்தவில்லையென்று நான் நினைக்கிறேன். ஆகவே நமது உற்பத்தியை அதிகரிக்க வேண்டும் என்றால் அடுத்த 7, 8 வருஷங்களில் நம்மிடம் பல்வேறு தரத்திலுமான ஆயிரக்கணக்கான நிபுணர்கள் உதிக்கவேண்டும். இந்த விஷயத்தை சம்பந்தப்பட்ட எல்லாரும் மிக அவசர காரியமாகக் கவனிக்க வேண்டும். பெரிய சுரங்க அதிபர்களைப் பொறுத்த வரையில், அவர்கள் நமது இளைஞர்களைக் குறுகிய காலச் சுரங்கப் பயிற்சிக்கு அனுப்பத் தவறி விட்டார்கள். கள பூகர்ப்ப சாஸ்திர நிபுணர்களைத் தயாரிக்கும் விஷயத்தில் நமது மந்திராலயம் பட்டப் பிற்கால சர்வகலாசாலை மாணவர்களுக்கான பயிற்சிக்கு ஏற்பாடு செய்து, அவர்களுக்குக் களப் பயிற்சியில் அநுபவம் ஏற்படுவதற்காக இந்திய பூகர்ப்ப சர்வே நடவடிக்கைகளிலும் கலந்து கொள்ள ஏற்பாடு செய்திருக்கிறது. அவர்கள் இந்திய சுரங்கங்கள் ப்யூரோவின் எதிர்காலத் திட்டங்களிலும் பயன்படுத்திக் கொள்வார்கள் என்று நம்புகிறேன்.

கனிப் பொருள் வர்த்தகத்தை அரசாங்கம் மேற்கொள்வதால் கனிப் பொருள்கள் ஏற்றுமதி குறைந்து வருகிறது என்று கூறப்படுகிறது. அது சரியல்ல. மாங்கனீஸ் ஏற்றுமதி விஷயத்தை மட்டும் கவனித்தால் கூட அவ்வாறு விமர்சிக்கப்படுவது நியாயமானதல்ல என்பது விளங்கும். கனிப் பொருள்களை சப்ளை செய்யும் விஷயத்தில் இந்தியாவுக்கு ஏகபோக உரிமையில்லை. பிரேசில், ரஷ்யா, தென் ஆப்பிரிக்கா ஆகிய நாடுகள் போட்டிக்கு வந்து விட்டன. பிரிட்டன் ரஷ்யாவிலிருந்து இறக்குமதி செய்கிற மாங்கனிசின் அளவு 27,000 டன்னாக இருந்தது சென்ற நான்கு வருஷங்களில் [illegible] கும் அதிகமாகப் பெருகியிருக்கிறது. ரஷியா தொழில் நுட்பத் துறையில் கணிசமாக முன்னேறியிருப்பதன் காரணமாக அங்குள்ள மாங்கனிசின் தரமும் மேம்பட்டிருக்கிறது. பூகோள ரீதியில், ரஷ்யா, உருக்கு உற்பத்தி செய்கிற நாடுகளான ஜெர்மனி, இங்கிலாந்து, இதர ஐரோப்பிய நாடுகளுக்குப் பக்கத்தில் இருக்கிறது. அமெரிக்காவும் அதன் பக்கத்து நாடுகளிலேயே மாங்கனிஸ் கிடைப்பதற்கான ஏற்பாடுகள் செய்வதோடு மாங்கனிஸ் சுரங்கங்களை அபிவிருத்தி செய்வதற்காக பிரேசில் நாட்டுக்கு ஏராளமான சௌகரியங்களைச் செய்து வருகிறது. ஆகவே சூழ்நிலைகளின் காரணமாக இந்தியா, பெருகி வரும் போட்டியைச் சமாளிக்க வேண்டியிருக்கிறது; இந்தியா சகல வழிகளிலும் அதற்குத் தயாராக இருக்கவேண்டும். ஆகவே தனியார் துறையைச் சேர்ந்தவர்கள் மாறுபட்டு வருகிற சர்வதேச வர்த்தக நிலைமையை மறந்துவிட்டு, சர்க்கார் ஸ்தாபனங்களின் மூலம் அந்த வர்த்தகத்தை மேற்கொள்வதற்காக ராஜாங்க வர்த்தகக் கார்ப்பரேஷனை அமைக்கிற சர்க்காரின் கொள்கையைக் கண்டனம் செய்வது சரியல்ல. ராஜாங்க வர்த்தகக் கார்ப்பரேஷனிடம் ஏற்றுமதிக் கோட்டாவில் 50 சதவிகிதமேதான் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது; மீதியுள்ள 50 சதவிகித வர்த்தகமும் தனியார் தரப்பினரிடமிருக்கிறது. இந்த விஷயத்தை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். ராஜாங்க வர்த்தகக் கார்ப்பரேஷனைவிட தனியார் தரப்பு வர்த்தகர்களுக்கு

(8-ம் பக்கம் பார்க்க)



ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும்
தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே

ஏடு 25] 2-8-1959 [வாரம் 34

# கவர்னரும் காவிரியும்

சென்ற ஆண்டு 1958-ல் கவர்னர் பெருமான் திருச்சிக்கு வந்தபோது திருவரங்கம் கோயிலுக்குப் போனார். போகும் வழியில் சிந்தாமணிக்கு அருகே, சூசையப்பர் கல்லூரிக்கு வடக்கேயுள்ள வெனிஸ் நகரம் என்ற அழகிய பெயர் பெற்ற சேரி, சாலையோரத்தில் இருப்பதால் அதன் பரிதாபத் தோற்றம் கவர்னர் பார்வையில் படக்கூடாது என்பதற்காக, சாலையோரத்தில் தட்டிகளை வைத்துக் கட்டி மறைத்து விட்டார்கள். மேல் சபை அங்கத்தினரான திருவாளர் துரைராஜப் பிள்ளை கவர்னரைச் சந்தித்தபோது இந்தச் செய்தியை கவர்னரின் கவனத்துக்குக் கொண்டு வந்ததுடன், கவர்னர் தமது விஜயத்தின் போது சேரிகளைப் பார்வையிடுவது என்று வைத்துக்கொண்டால், அதை முன்னிட்டாவது சேரி வாழ் மக்களுக்கு தற்காலிகமாகவாவது சில சௌகரியங்கள் கிடைக்க வழியுண்டாகுமென்றும், நகரத்தில் துயருற்றுக் கிடக்கும் சேரி மக்களையும் அவர்கள் வாழ்கின்ற நரக வாதனை மிக்க சேரிகளையும் கண்ணில்படாமல் தட்டிகளை வைத்துக்கட்டி மறைக்க முயல்வது பெரும் அநீதியாகுமென்றும் சுட்டிக் காட்டினார். இதன் பயனாக உடனே வெனிஸ் நகரைக் கவர்னர் ஒரு தடவை நேரில் காணவும், அங்குள்ள மக்களின் துயரங்களுக்குப் பரிகாரம் தேட வேண்டுமென்று நகரசபையினர்க்கு அறிவுறுத்தவும் நல்ல வாய்ப்பாக அமைந்தது.

ஆடிப் பதினெட்டின்போது வழக்கமாக வெள்ளம் கரை புரண்டு வருகின்ற காவிரியில் இவ்வாண்டு கட்டுக் கடங்காத வெள்ளம் முன்பே பெருகி வெனீஸ் நகர், சூசையப்பர் கல்லூரிப் பகுதிகள் யாவும் நிறைந்து உறையூர் மேம்பாலத்துக்கு வடக்கே புதிதாகத் தில்லை நகர் வளர்ந்து வருகின்ற கிழக்குப் பகுதியிலும் தண்ணீர் நிறைந்து விட்டது.

கவர்னர் விஜயம் செய்யாத வெனீஸ் நகரில் காவிரி வெள்ளம் புகுந்து குடிசை விடாமல் துழாவி அங்குள்ள மக்களுக்குப் பெருந்தொல்லையை உண்டாக்கி விட்ட பரிதாபம் காணச் சகியாதது. சிந்தாமணிக் கரைப் பகுதியில், மாணவர்கள் விடுதியாக இருக்கும் பாப்பம்மாள் சத்திரம் இடுப்பளவு தண்ணீரிலும் உறையூர் சங்கீதபுரமும் இரண்டடித் தண்ணீரில் மிதந்தன.

அடிக்கடி இம்மாதிரி வெள்ளப் பாழ் ஏற்படும் போதெல்லாம் பாதிக்கப்படுவது பள்ளத்தாக்கில் உள்ள ஆண்டுகளில் நகருக்குள் வெள்ளம் புகுந்து விளையாடுவதற்கு இடம் கொடுப்பதாக முடியும்.

இந்தத் தடவை நகரப் பொறுப்பை ஏற்றிருக்கும் காங்கிரஸ் நகரசபையார் தங்களுடைய முக்கியமான பணிகளில் சேரி வாழ் மக்களின் நல்வாழ்வு ஒன்றையும் கொண்டிருக்கிறார்கள். தாற்காலிகமாக வெள்ளப் பாழ் ஏற்பட்ட சேரிக்கும் மக்களுக்கும் நிவாரண உதவியைச் செய்வது ஒருபுறமிருக்க, நிரந்தரமாக வெள்ளத்திலிருந்து அவர்களுக்கு விடுதலை கிடைக்க வெனீஸ் நகருக்கு மதில் எடுக்கும் திட்டம் ஒன்று உருவாகியிருப்பதாகவும் அறிகிறோம்.

நகரசபைத் தலைவரும் மாவட்டக் கலெக்டரும் சேதப்பகுதிகளை நேரில் சென்று பார்த்து துயருற்ற மக்களுக்கு சின்னையாப்பிள்ளை சத்திரம் போன்ற இடங்களில் தங்க வசதியும், உணவு முதலிய உதவிகளுக்கும் ஏற்பாடு செய்தது பாராட்டுக்குரியது.

மேலச்சிந்தாமணியில் வந்து விழும் வடிவாய்க்காலை அங்கு காவிரியில் கலக்காமல் திருப்பி தேவதானத்துக்குக் கிழக்கே காவிரியில் கொண்டுபோய் விட்டு விட்டால், இத்தகைய வெள்ளச் சேதம் ஏற்படாமல் தடுத்துவிடலாமென்றும் இந்த வேலையைச் செய்து முடிக்க மக்களின் ஒத்துழைப்பும் சென்னை அரசாங்கத்தின் ஆதரவும் கிடைக்க வேண்டுமென்றும் அப்படிக் கிடைக்கவும், வெள்ளத்தொல்லையை நிரந்தரமாகப் போக்கிவிடவும் தக்க நடவடிக்கையைத் தாம் மேற்கொள்வதாக நகரசபைத் தலைவர் உயர்திரு லூர்துஸ்வாமிப்பிள்ளை அவர்கள் அறிவிக்கிறார். இந்த வடிவாய்க்காலைத் திருப்பி ஊருக்குக்கிழக்கே கொண்டு செல்வதன் மூலம், வெனீஸ் நகரமும், சிந்தாமணியும் வெள்ளத்திலிருந்து பிழைக்கும் என்பதுடன் சிந்தாமணித் துறையும் ஆபாசமின்றித் தூய்மைப் படவும் வழிபிறக்கும்.

சிந்தாமணிக் கரையோரமாக வெள்ளத் தடுப்பு மதில் எடுப்பதும் கொசமேட்டு அய்யன் கரையைப் பலப்படுத்துவது வெள்ள விபத்துக்கு நல்ல எதிர்ப்பாக அமையும்.

பள்ளத்தாக்கான வெனிஸ் நகரம் அங்கே இருக்கத்தான் வேண்டுமா என்பதும் சிந்தனைக்கு உரியது. நகருக்கு முக்கியமான மத்திய பஸ் நிலையம் அமைக்க அந்த இடம் பயன்படக்கூடியது. வெனிஸ் நகரைக் காலி செய்து அங்குள்ள மக்களுக்கு வேறு இடம் கொடுத்துவிட்டால், வசதிகள் மிக்க பஸ் நிலையம் தோன்றச் செய்யலாம்.

எப்படியும் இன்றுள்ள காங்கிரஸ் நகரசபையாரும் தலைவரும் தங்கள் பதவிகாலத்துக்குள் இந்தக்காரியங்களை முடிக்கத் தீவிர முயற்சி செய்வார்கள் என்பதில் ஐயமில்லை. சென்னை அரசாங்கம் தனது முழு ஆதரவையும் கொடுத்து நகரசபையின் பணி சிறக்கச் செய்ய வேண்டுமென்றும் மக்கள் நலன் பெற உதவ வேண்டுமென்றும் கேட்டுக் கொள்கிறோம். மாவட்டம் பல துறைகளிலும் முன்னேறுவதில் மிகுந்த ஊக்கம் கொண்டுள்ள கலெக்டர் திரு. பாஷா அவர்கள் திருச்சியில் இருக்கும் காலத்திலேயே இதற்கு வேண்டிய உதவி புரிவார் என்று நம்புகிறோம்.

# சமுதாய அபிவிருத்தி

சமுதாய அபிவிருத்தித் திட்டம், நாட்டின் வரலாற்றிலேயே முதல் தடவையாக நிர்வாகத் துறையின் ஐக்கியத்துக்கும், நாட்டின் அபிவிருத்திக்குப் பொதுவானதொரு அமைப்புக்கும் வழி கோலியுள்ளது என்றும், அபிவிருத்தி வேலைகளுக்கான அடிப்படைப் பிரிவுகளான திட்டத் தொகுதிகளின் அமைப்பு முறை, சிப்பந்தி ஏற்பாடு, நிதி ஆதாரங்கள் ஆகியவற்றின் ஒரு சீரான அபிவிருத்திக்கு அது உதவி வந்துள்ளது என்றும் மத்திய சமுதாய அபிவிருத்தி மந்திரி ஸ்ரீ எஸ். கே. டே. மைசூரில் சமுதாய அபிவிருத்தி பற்றிய தேசிய மகாநாட்டின் ஆரம்பக் கூட்டத்தில் பேசுகையில் கூறினார்.

பிரஸ்தாப திட்டம் தொகுதி ஸ்தானத்தில் பல்வேறு இலாகாக்களுக்கிடையே ஒரு முகப்பாட்டை ஏற்படுத்தியுள்ளது என்றும், தொகுதிக் குழுக்களின் அங்கத்தினர்கள் அந்தந்தப் பிரதேசத்தின் அபிவிருத்திக்கு இப்பொழுது கூட்டாசப் பொறுப்பு வகித்து வருகின்றனர் என்றும் அவர் கூறினார்.

இத்திட்டம், ராஜ்யங்கள் இத்துறையில் மத்திய சர்க்காரின் பங்காளிகள் என்ற உணர்ச்சியை அவற்றுக்கிடையே ஏற்படுத்தியுள்ளது; மத்திய சர்க்கார் பல்வேறு பிரிவுகளின் அனுபவங்களை ஒன்று திரட்டி இத்திட்டத்தின் வாயிலாக அவற்றுக்கு வழங்கி வருகின்றனர்.

இத்திட்டம் மற்றும் மேம்பட்ட வாழ்க்கைத் தரத்துக்கான விருப்பமொன்றை அது கிராம மக்களிடையே ஏற்படுத்தியுள்ளதன் மூலம் மந்த வாழ்க்கையிலிருந்து அவர்களைத் தட்டியெழுப்பி கிராமங்களில் ஒரு சலசலப்பையுண்டாக்கியிருக்கிறது. ஆனால், …ம்மை நிலையில் உள்ள மக்கள் பிரிவினர் சமூக வசதிகள் சம்பந்தப்பட்ட நலன்கள் திட்டத்தின் …கலாக, இதர அம்சங்களில் … கொள்ள வகையில்லாமலிருந்துவருவதும், மக்களின் தேவைகள் சர்க்காரின் நிதி ஆதாரங்களை மிஞ்சியதாக இருந்து வருவதும் இத்திட்டத்தின் குறைபாடுகளாகும்.

ஸ்ரீ டே, பின்னர் இத்திட்டத்தின் பல்வேறு அம்சங்கள் விஷயத்தில் ஏற்பட்டுள்ள முன்னேற்றம் குறித்து சுருக்கமாக எடுத்துரைத்தார். இந்தக் கூட்டம், 1954-ம் ஆண்டில் உதகமண்டலத்தில் நடைபெற்ற மகாநாட்டுக்குப் பின்னர், இரண்டாவது தடவையாகத் தென் பிராந்தியத்தில் நடைபெறும் கூட்டமாகும் என்றும், ஐந்தாண்டுகளுக்கு முன்னர் திட்ட நிறைவேற்றப் பொறுப்பு முழுவதும் சர்க்கார் ஸ்தாபனத்தின்கீழ் இருந்துவந்த நிலைமை மாறி, திட்டத்தின் முழுப் பொறுப்பும் அடிப்படை ஸ்தாபனங்கள் ஆகியவற்றின் மூலம் வேலை மேற்கொள்ளும் உத்தியோகச் சார்பற்றவர்களின் கீழ் இப்பொழுது மாற்றப்பட்டிருக்கிற ஒரு புதிய திருப்பத்தைக் குறிப்பதாக இந்த மகாநாடு அமைந்திருக்கிறதென்றும் அவர் கூறினார்.

ஜனநாயக ரீதியான பரவல் அதிகார முறை அமைப்பு விஷயமாக ஏற்பட்டுள்ள முற்போக்கு பற்றி அவர் விவரிக்கையில், அது சம்பந்தப்பட்ட அத்தியாவசியமான சட்ட திட்டங்கள் ஒன்பது ராஜ்யங்களில் ஏற்கெனவே இயற்றப்பட்டுள்ளன அல்லது இயற்றப்பட்டு வருகின்றன என்று கூறினார். இத்திட்டத்தின் வெற்றிக்கு வகை செய்வதற்கு மக்களுக்கும் அவர்களுடைய பிரதிநிதிகளுக்கும் இத்துறையில் பயிற்சியும், கல்வியும் அளித்து வர வேண்டியதன் அவசியம் குறித்து அவர் வலியுறுத்தினார். இந்நாட்டு மக்கள் நிர்வாகத்துறையினர் சம்பந்தமாகக் கொண்டிருந்த அச்சங்களை ஒழித்து இப்பொழுது அவர்களுக்குள்ள உரிமைகள் குறித்து விழிப்புணர்ச்சியைப் பெற்றுள்ளனர். ஆனால், அதே சமயத்தில் அவர்களுக்குள்ள பற்றி அவர்கள் நன்கு அறியாமலிருந்து வருகின்றனர் என்று அவர் குறிப்பிட்டார். ஜனநாயக தத்துவத்தின் லட்சியங்கள், நோக்கங்கள், வேலை முறைகள் ஆகியவை பற்றி அவர்களுக்கு எடுத்துணர்த்துவதன் மூலமே இதற்குப் பரிகாரம் காண முடியும் என்றும் அவர் தெரிவித்தார்.

அபிவிருத்தி வேலைப் பொறுப்புக்களை மேற்கொள்ளுவதற்காக அரசியல் கட்சிகள் பயிற்சிபெற்ற சிப்பந்திகள் குழாங்களைத் தயார் படுத்தலாம்; ஆனால் அவை அவற்றின் சொந்தப் பிரச்னைகளில் ஆழ்ந்துள்ளதால், மக்கள் சர்க்கார் இந்த வேலைப் பொறுப்பை மேற்கொள்ள வேண்டியிருக்கிறது என்று ஸ்ரீ டே கூறினார். ஆனால், உத்தியோகச் சார்பற்றவர்களுக்கான பயிற்சி ஏற்பாட்டை அவசியமான சர்க்கார் உதவியுடன் பெருமளவுக்கு உத்தியோகச் சார்பற்ற ஸ்தாபனங்களின் மூலமாகவே நடத்திவரவேண்டுமென்று அவர் கூறினார்.

இது விஷயமாக, மத்திய சமுதாய அபிவிருத்தி மந்திராலயத்துடன் இணைக்கப்பட்டுள்ள உத்தியோக ரீதியில் அல்லாத பார்லிமெண்டு ஆலோசனைக் கமிட்டி வெற்றிகரமாக இயங்கி வருவது பற்றி அவர் எடுத்துரைக்கையில், ஆராய்ச்சி முகாம்களில் சேருவதற்கும், முஸ்ஸோரியில், சமுதாய அபிவிருத்தித்துறை பற்றிய படிப்பு, ஆராய்ச்சிக்கான மத்திய நிலையத்தில் நடத்தப்படும் வகுப்புகளில் கலந்து கொள்ளுவதற்கும் மற்றும் இத்துறையில் வேலை நடவடிக்கைகளுடன் சம்பந்தப்படுத்திக் கொள்வதற்கும் பார்லிமெண்டு அங்கத்தினர்கள் முன் வருவதிலிருந்து அவர்கள் இத்திட்டத்தில் எவ்வளவு அக்கறை காட்டி வருகின்றனர் என்பது புலனாகிறது என்று அவர் கூறினார்.

மத்தியிலும் ராஜ்யங்களிலும், உத்தியோக ரீதியில் அல்லாத ஆலோசனைக் கமிட்டிகளின் உபகமிட்டிகள், உத்தியோகச் சார்பற்றவர்களுக்கான இப்பயிற்சி ஏற்பாட்டைக் கவனித்து வரலாம் என்று அவர் தெரிவித்தார்.

ஸ்ரீ டே மைசூர் ராஜ்யத்தின் மன்னர்கள் க்ஷேம நல நடவடிக்கைகள் விஷயத்தில் மேற்கொண்டுவந்துள்ள பணிகள் குறித்து பாராட்டு தெரிவித்து, நிதி ஆதாரங்களின் வரம்பு காரணமாக அவற்றைப் பரவலாக விஸ்தரிக்க முடியவில்லையென்றும், மக்கள் அபிவிருத்தி வேலைகளுக்குத் திட்டமிட்டு நிறைவேற்றும் பொறுப்பைத் தாங்களே மேற்கொள்ளுவதன் மூலம் அந்த க்ஷேம நல அபிவிருத்தித் திட்டங்களை நிரந்தரமானவையாகவும், விரிவானவையாகவும் செய்யலாமென்றும் அவர் கூறினார்.

கிராமங்களில், கிசான் மண்டல்கள், மஹிளா மண்டல்கள் போன்ற வேலை இயக்க அம்சமுள்ள பல்வேறு சங்கங்களை ஏற்படுத்துவதற்கான அவசியம் குறித்து வலியுறுத்துகையில், நன்கு ஊறிவிட்ட பத்தாம்பசலிப் பழக்க வழக்கங்களைக் கைவிட முடியாது, செக்கு மாடுபோல ஒரே பாதையில் சுழன்று வரும் வயது முதிர்ந்தவர்களுக்கெதிராக, மக்களிடையே உத்வேகத்தைத் தட்டியெழுப்பக்கூடிய வல்லமை பெற்ற இளைஞர்களைத் திரட்டி அமைக்க வேண்டியதன் அவசியம் பற்றி அவர் விசேஷமாக வலியுறுத்தினார்.

---

**ஈரோடு டி. மு. கோ.**

**O. P. No. 2 of 58.**

வெங்கட்ராம அய்யர்—மனுவாதி

1. சுப்பண கவுண்டர், 2. ராமண கவுண்டர், 3. சின்னம்மாள்—எல்லப்பாளையம், காகம் கிராமம்.—எதிர் மனுவாதிகள்.

மனுவாதி எதிர் மனுவாதிகளுக்குச் சேரவேண்டிய போக்கிய பணத்தை கட்டி ஷை மனுக் கொடுத்திருக்கிறார். அது 3—8—59-ம் தேதிக்கு வாய்தாப் போடப்பட்டிருக்கிறது. அன்று எதிர் மனுவாதிகள் ஆஜராகாவிட்டால் மனு ஒருதலைப்பட்சமாக தீர்ப்பாகுமென்பதை அறியவும்.

S. சிவசுப்பிரமணியம்,
அட்வகேட்.

8 | 3090 | 97

(5-ம் பக்கத் தொடர்ச்சி)

அனேக வசதிகள் இருக்கின்றன; இந்த விஷயங்களையெல்லாம் நீங்கள் கவனமாகப் பரிசீலிப்பீர்கள் என்று நம்புகிறேன். மிகவும் கடினமாக முயற்சித்து சர்வதேசப் போட்டியில் வெற்றிபெற்ற நமது ஏற்றுமதியைப் பெருக்குவதுதான் நமது பொது லட்சியம் என்பதை மறந்துவிடக்கூடாது.

சர்க்கார் இப்போது மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தைத் தயாரித்து வருகின்றனர். இரும்புக் கனி, வேறு சுரங்கப் பொருள்கள் ஆகிய விஷயத்தில் லட்சிய அளவுகளை நிர்ணயித்து அவைகளை நிறைவேற்றவும் செய்யலாம். மாங்கனிஸ் போன்ற வேறு கனிப் பொருள்கள் விஷயத்தில் அம்மாதிரியான லட்சிய அளவுகளைத் தீர்மானிப்பது கடினம். இரும்புக் கனி விஷயத்தில் உற்பத்தியும், ஏற்றுமதியும் ஏறுமுகமாகத் தானிருக்கின்றன. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இரும்புக் கனி உற்பத்தியின் லட்சிய அளவு 1.25 கோடி டன்னாகத் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இந்த அளவை 3.4 கோடி டன்னாக அதிகப்படுத்த உத்தேசித்து வருகிறோம். அந்த அளவில் 30 சதவிகிதம் ஏற்றுமதிக்காகத் தேவைப்படலாம்.

நமது கனிப் பொருள் உற்பத்தியைப் பெருக்கும் விஷயத்தில் இந்திய பூகர்ப்ப சர்வே ஸ்தாபனம், இந்திய சுரங்கங்கள் ப்யூரோ ஆகியவை மிகவும் உதவியாக இருக்கின்றன. கேத்திரி, டாரிபோ, சிக்கிம், ராக்கா ஆகிய சுரங்கங்களும் துரிதமாக அபிவிருத்தி செய்யப்படுமென்று எதிர்பார்க்கிறோம். நமது உற்பத்தி அளவை இப்போதைய அளவான 8,000 டன்னிருந்து 35,000 டன்னாக அதிகரிக்கவேண்டும் என்பதுதான் நமது குறிக்கோள். நமது தொழில் வளர்ச்சிக்கு கந்தகமும் இதர கனிப் பொருள்களைப் போல பிரதானமாகும். கந்தகம் கிடைக்கக்கூடிய போதுமான அளவிலான சுரங்கமெதுவும் இது வரையில் கண்டுபிடிக்கப்படவில்லை. ஆகவே பைரட்டுகளிலிருந்து கந்தகத்தைத் தயாரிக்கத் திட்டமிட்டிருக்கிறோம். 1965 அல்லது 1966-ல் 90,000 டன் கந்தகம் உற்பத்தி செய்யப்படுமென்று எதிர்பார்க்கப்படுகிறது. சல்பூரிக் ஆசிட் உற்பத்தி செய்வதற்காக பீகார், மைசூர் ஆகிய ராஜ்யங்களின் பைரட்டுகள் உபயோகப்படுத்தப்படுகின்றன.

இப்போது உற்பத்தி செய்யப்படுகிற கனிப் பொருள்களின் மதிப்பு 1,000 கோடி ரூபாயாக அதிகரிக்க வேண்டுமானால் மூன்றாவது திட்ட இறுதிக்குள்ளாக நமது லட்சிய அளவு 300 கோடி ரூபாயாக இருக்கவேண்டும். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் வளர்ந்து வருகிற திட்டமாக இருக்கும். 300 கோடி ரூபாய் லட்சிய அளவைத் தாண்டி விட்டால், 1975-ல் 1000 கோடி ரூபாய் லட்சிய அளவை எட்டுவது சுலபமாக இருக்கும்.



(4-ம் பக்கத் தொடர்ச்சி)

கால்; ஹெமிங்வேக்கும் முழங்காலில் தான் மோசமான காயம் ஏற்பட்டது). ஹென்ரி ஆங்கில நர்ஸ் ஒருத்தியை மணம் செய்து கொள்ளுகின்றான். புண் ஆறிப் போர்முனைக்கு மீண்டதும், தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளக் கருதிப் படையைவிட்டு ஓடி விடுகிறான். நர்ஸோடு ஸ்விட்சர்லாந்துக்குத்தப்பிச்சென்று விடுகிறான். அங்கே அவள் பேறு காலத்தில் இறந்து விடுகிறாள். வாழ்க்கை முடிச்சாகி விடுகிறது. இதுவும் அழகிய தூயநடையில் அருமையாக எழுதியுள்ள நூலே; எனினும் இது சொல்லிச் செல்லும் இறுதிக் கருத்து அவநம்பிக்கையாகும்.

ஹெமிங்வே தன்னைப் போலவே தன் கதாநாயகனையும் படைத்து விடுகிறார்; சோர்வு, சோர்வு, சோர்வு என்பதையே அங்கே காண்கிறோம். 'டெத் இந் தெ ஆஃப்ட்டர்நூன்'' (1932) ''கிரீன் ஹில்ஸ் ஆஃப் ஆப்ரிக்கா'' (1935) ஆகிய இரண்டிலும் இந்தச் சோர்வு மனப்பான்மை உச்சநிலை அடைந்துள்ளது. இவை இரண்டும் மிக முக்கியமான நூல்கள் அல்ல. முதல் நூல் சல்லிக்கட்டைப் பற்றியது; இது ஆசிரியருக்குக்கைவரப்பெற்ற ஒரு விளையாட்டாகும். இரண்டாவது நூல் காட்டு விலங்குகளை வேட்டையாடுவது பற்றியது; இதுவும் ஆசிரியருக்கு நிறையத் தெரியும். ஆயினும் இரண்டு நூல்களும் மரணத்தைப் பற்றியதேயாகும். மரணத்தைப் பற்றிய நினைப்பு தன் மனத்தில் நெடுநாளாகவே ஒரு பெரும் பாரமாக இருந்திருக்கிறது என்று ஹெமிங்வேயே சொல்லியிருக்கிறார். நரம்புத்தளர்ச்சியுற்றவர் எழுதிய நூல் போல இருக்கின்றன இவை இரண்டும். தனக்கு ஆற்றல் ஊட்டும் சமூகத்தினின்றும் பிரிந்து சென்று ''தனியே சமாதானம்'' செய்து கொண்டு, போரினால் மனங்கசந்து, புண்பட்டு, ஒன்றுக்கும் உதவாதவனாய் மனம் உடைந்து நொறுங்கிக் கிடக்கும் ஒருவனை, ஆன்மப் பசியால் வாடும் ஒருவனை, இங்கு காண்கின்றோம். உடைந்த உள்ளம் சீர்படவில்லையேல் இனி இவர் நல்ல ஒரு நாவலும் எழுதமாட்டார் என்று தோன்றுகி

## தாயகம் திரும்பினார்!

திருச்சி வழக்கறிஞர் திரு. எம். முத்துசுவாமி அவர்களின் சகோதரரும், எம். கே. அனந்தர் அவர்களின் மருகரும், மேட்டூர் செமிகல்ஸைச் சேர்ந்தவருமாகிய திரு. பத்மனாபன், B. Sc., அவர்கள் இந்தோ ஜெர்மன் தொழிற் திட்டப் படிப்பு பெற இந்திய சர்க்காரால் ஜெர்மனிக்கு அனுப்பப்பட்டவர். இவர் ஜெர்மனியில் தமது படிப்பை முடித்துக் கொண்டு, இங்கிலாந்து, பிரான்ஸ், ஸ்விட்ஜர்லண்ட் ஆகிய நாடுகளுக்குச் சென்றுவிட்டு சென்ற சனியன்று திருச்சி வந்து சேர்ந்தார்.

---

உடைந்த உள்ளம் சீர்படுவதற்கு ஹெமிங்வேக்கு நெடுநாளாகிறது; மிக்க வருத்தப்பட்டுச் சீரடைகிறார். 1937-ல் வெளியான ''டு ஹேவ் அண்ட் ஹேவ் நாட்'' என்ற அடுத்த நாவல் வழிகாட்டுகிறது. ஹெமிங்வே ஏதோ நல்ல பாடம் ஒன்றைக் கற்றுக் கொண்டார் என்று இந்த நூலில் காண்கின்றோம். தன்னந்தனியே பிரிந்து உள்ளவன் உய்ய மாட்டான் என்பதை அவர் உணர்ந்து கொண்டார். உண்மையில் 1937-ல் ஹெமிங்வே இருபதாண்டுகளாகத் துண்டித்துக் கொண்டு தனியே இருந்த நிலையை விட்டு மீண்டும் சமூகத்தோடு சேர்ந்து கொண்டார். ஜனநாயகத்துக்காகப் போராடத் துணிந்து விட்டார்.

ஸ்பெயினில் நடந்த உள்நாட்டுப் போரே ஹெமிங்வே இவ்வாறு உயிர் பெற உதவிற்று என்று தோன்றுகிறது. மன்னர் சார்பில் சேர்ந்து சண்டை செய்பவர்களையே இவர் மனம் ஒப்பிற்று. 1938-ல் ''ஃபிஃப்த் காலம்'' என்னும் நாடகத்தை வெளியிட்டார். இந் நாடகம் மன்னர் சார்பினரைப் புகழ்கிறது. அவர்களுடைய கொள்கையில் நம்பிக்கை வைக்கின்றது. ஹெமிங்வேயின் கதாநாயகன் எவ்வளவோ படித்துக் கொண்டான்.

ஹெமிங்வேயின் புத்துயிரும் அதுவே. இதனை அவருடைய அடுத்த நாவலில் காண்கின்றோம். ''ஃபார் ஹூம் தெ பெல் டோல்ஸ்'' என்ற அந்த நாவல் 1940-ல் வெளியாயிற்று.

...ன் தனியே பிரிந்திருப்ப...

உய்வில்லை என்ற கருத்தை அவர் கற்றுக் கொண்டார் என்று கண்டோம். இந்த நாவலில் இன்னும் ஒரு முன்னேற்றத்தைக் காணலாம். "ஒருவனும் தனக்குத் தானே போதும் என்னும்படியான தீவு போன்றவன் அல்லன்" என்னும் கருத்தை அவர் இங்கு படித்துக்கொண்டார். இம்மொழிகள் 17-ம் நூற்றாண்டு ஆங்கிலப் புலவர் ஜான் டான் என்பவர் செய்த சமயச் சொற்பொழிவிலிருந்து எடுத்தனவாகும். நாவலும் இம்மொழிகளோடேயே தொடங்குகிறது. சாவுமணி அடிப்பதை நினைப்பூட்டிய வண்ணம் கதையும் முடியக் காண்கின்றோம். "சாவுமணி யாருக்காக அடிக்கிறது என்று பார்க்க ஆள் விடாதே; உனக்காகத்தான் அடிக்கிறது" என்னும் மொழிகளோடு முடிகிறது நாவல். இக் கதையில் ஹெமிங்வே கதாநாயகனின் பெயர் ராபர்ட் ஜோர்டன். இவனும் ஸ்பானிய உள்நாட்டுப் போரில் அமெரிக்க வீரனாகத் தொண்டாற்றுகிறான். தன் கடமையைச் செய்து காலமாகிறான். பழைய கதாநாயகன்தான் எனினும் எவ்வளவோ படித்துக் கொண்டான்; புண்பட்டிருந்தாலும் பொறுமையாய் இருப்பது எங்ஙனம் என்று கற்றுக்கொண்டான்; ஒழுங்காக நடக்கிறான். கதையும் மனக்கசப்பில்லாமல் முடிகிறது; ஏனெனில் வாழ்க்கை வாழத் தகுந்ததே என்றும், உயிரைக் கொடுக்கத் தக்க நம்பிக்கைகள் உள்ளன என்றும் அவனுக்குப் புலப்பட்டு விட்டது.

இந்த நாவலுக்குப் பிறகு ஹெமிங்வே பத்து ஆண்டுவரை ஒன்றும் வெளியிடவில்லை. அவர் இரண்டாவது உலகப்போரில் ஈடுபட்டிருந்தது அதற்கு முக்கிய காரணம். 1950-ல் அவர் தமது மௌனத்தைக் கலைத்து, "அக்ராஸ் தெ ரிவர் அண்ட் இன்டு தெ ட்ரீஸ்" என்னும் நாவலை வெளியிட்டார். இதனை மதிப்புரையிட்டவர்கள் ஹெமிங்வேயின் எழுத்துத் திறமை அணைந்து விட்டது என்று நாடறியத் தூற்றினார்கள். அதுவும் அவ்வளவு சிறந்த எழுத்தும் அல்ல.

1952-ல் "கிழவனும் கடலும்" என்ற நாவல் வெளி வந்தது; ஹெமிங்வேயின் திறமை அணைந்தது என்றோரின் சொல் பொய்த்தது. இந்த நாவலை எல்லாரும் [illegible] அருமை [illegible]டினார்கள். ஆசிரியருக்கு இந்த நாவலால் இலக்கிய நோபல் பரிசும் கிடைத்தது. இது தகும். இந்த நாவல் சிறியதே. கியூபா தீவில் ஒரு கிழவன்; அவன் செம்படவன்; அவனுக்கு நெடுங்காலமாகச் சரியாக மீன் கிடைக்கவில்லை; கடைசியில் மாபெரும் மீன் ஒன்று அகப்படுகிறது; இரண்டு நாள் அல்லும் பகலுமாய், அவன் தன் தூண்டிலில் அகப்பட்ட அம்மீனை விடாமல் பிடித்து இழுத்திழுத்துப் பார்க்கிறான்; மீன் அவனைக் கரையினின்று கடலிலே நெடுந்தொலைவுக்கு இழுத்துச்செல்கிறது; கடைசியில் மீனை அவன் கிட்டக்கிட்ட இழுத்துக் கொண்டு வந்து, ஈட்டியால் குத்திப் படகிலே தூக்கி எறியப் போகிற நேரத்தில், சுறா மீன்கள் சூழ்ந்து அந்த மீனை — அவன் பாடுபட்டுக் கொணர்ந்த மீனை - குளிர்காலம் எல்லாம் குறையின்றி உண்ணத் தக்க அந்தப் பெரிய மீனை — அவனிடமிருந்து பறிக்கத் தொடங்குகின்றன. சுறா மீன்களை அவன் கொல்கிறான்; அதற்குள் அவை மீனைத் தின்று விடுகின்றன. எலும்புக் கூடுதான் அவனுக்குக் கிடைக்கிறது; அதனோடு வீடு வந்து சேர்கிறான் அவன். அதுதான் கதை.

(இது உண்மையான கதையுமாகும்; அந்தக் கிழவனை கியூபாவில் ஹவானா என்னும் இடத்துக் கருகில் இன்னும் காணலாம்.)

வாழ்க்கையைப் பற்றி ஹெமிங்வே இன்று என்ன கொள்கையுடையவர் என்பதை இக்கதையால் காண்கின்றோம். வாழ்க்கையே ஒரு போராட்டம்; கடக்க முடியாத இயற்கைத் தடைகள் நிரம்ப உள்ளன. மரணம் என்பதும் திண்ணம். இந்த நிலையில் மனிதன் வெற்றி பெறுவது இயலாது; என்றாலும் இப்போராட்டத்தில் அவன் வீரனாக விளங்கலாம்; இவ்வாறு விளங்கினால், தோல்வியும் மாண்புடையதாகத் துலங்கும்; இதுவே ஒரு வெற்றியாகும். ஹெமிங்வே இந்த நாவலில் பொறித்துள்ள கருத்து இது தான். ஒன்றும் முடியாது என்ற முழுச் சோர்வும் அவநம்பிக்கையும் குடி கொண்டிருந்த ஹெமிங்வே இத்தனை ஆண்டுகளுக்குப் பிறகு இப்போது இந்நாவலில், புதியதோர் திருவருள் பெற்றவர் போல, பெரியதோர் மாறுதலுற்று விளங்கக் கா[illegible]

## இந்திய மிளகு

இந்திய மிளகு இறக்குமதியில் அமெரிக்கா முதல் இடம் வகிக்கிறது. 1087 டன் மிளகு அது இறக்குமதி செய்திருக்கிறது. இவ்வாண்டு முதல் ஆறு மாத காலத்தில் இந்தியா 4000 டன் மிளகு ஏற்றுமதி செய்திருக்கிறது. இந்திய மிளகு லவங்க வர்த்தகச் சங்கம் இந்தத் தகவலை வெளியிட்டுள்ளது.

## தொழிற்சாலை

நூல் தயாரிப்புக்கேற்ற முறையில் கம்பள ரோமத்தைப் பதப்படுத்தும் தொழிற்சாலை ஒன்றை மேற்கு வங்கத்திலுள்ள ஜகதாலில் நிறுவ இந்திய சர்க்கார் அனுமதியளித்திருக்கிறார்கள். ஐஸக் ஹோல்டன் அண்டு ஸன்ஸ் என்ற பிரிட்டிஷ் நிறுவனமும் கல்கத்தாவிலுள்ள ஆங்கிலோ — இந்தியன் ஜூட் மில்ஸ் கம்பெனி, டங்கென் பிரதர்ஸ் லிமிடெட் என்ற நிறுவனங்களும் கூட்டாகச் சேர்ந்து ஜகதாலில் தொழிற்சாலையை நிறுவுகின்றன.

இந்தத் தொழிற்சாலை ஆண்டு இறுதிக்குள் இயங்கத் தொடங்கும்.

# தெரிந்துகொள்வீர்

### விமானப் பயணம்

அமெரிக்க உதவி ஜனாதிபதி நிக்ஸனின் ரஷ்ய விஜயத்தைப் பற்றிச் செய்தி திரட்டச் செல்லும் பத்திரிகை நிருபர்கள் பலரைக் கொண்ட அமெரிக்க ஜெட் விமானம் ஒன்று நியூயார்க்கிலிருந்து மாஸ்கோவுக்கு இடையில் எங்கும் தங்காமல் 8 மணி 45 நிமிட நேரத்தில் வந்து சேர்ந்திருக்கிறது. இவ்வளவு குறுகிய காலத்தில் இதற்குமுன் எவ் விமானமும் வந்து சேர்ந்ததில்லை. அமெரிக்கத் தனியார் விமானக் கம்பெனியைச் சேர்ந்த இதில் 76 பேர் வந்தனர்; பெரும்பாலானவர்கள் நிருபர்கள்.

4750 மைல் பயணம் இது. சில சமயம் விமானம் மணிக்கு 610 மைல் வேகத்திலும் பறந்திருக்கிறது. சராசரி வேகம் மணிக்கு 555 மைல் ஆகிறது.

### பூச்சி வளர்ப்பு

உகாந்தாவிள்ள விவசாய நிபுணர்கள் பருத்திச் செடிகளுக்கு கேடு விளைவுக்கும் 'லைகஸ்' என்ற பூச்சியை ஒழிக்க புதுமுறை ஒன்றைச் சோதித்து வருகிறார்கள்.

பயிரைத் தாக்கும் பூச்சிகளில் பலவற்றை ஒட்டுண்ணிகள் பற்றுவதாக சோதனையால் தெரிந்தது. ஒட்டுண்ணிபற்றிய பூச்சி செயலற்று மசத்துவிடுகிறது. பருத்திச் செடிக்கு கேடுவிளைவிக்கும் 'லைகஸ்' பூச்சியும் ஒருவித ஒட்டிண்ணிக்கு இரையாகிவிடுகிறது. இந்த ஒட்டுண்ணிகளை சோதனைக்கூடத்தில் வளர்த்து 'லைகஸ்' பூச்சி பரவியுள்ள பருத்திக்காட்டில் தெளித்து விட்டால், பூச்சிகள் அழிந்துவிடும் என்று நம்பப்படுகிறது.

### யானை மலை ஏறுகிறது

ஜம்போ என்னும் யானை தோல் சப்பாத்து அணிந்து கொண்டு ஆல்ப்ஸ் மலையில் ஏறத் தொடங்கிவிட்டது. 7300 அடி உயரத்திலுள்ள கிளேப்பியர் கணவாய்க்கு அது செல்கிறது. அதனோடு இத்தாலியரான அதன் பாகனும், ஜான் ஹாய்ற்று என்னும் பிரிட்டிஷ் வரலாற்று அறிஞரும் போகிறார்கள். பண்டைய கார்த்தேஜ் பேரரசின் தளபதி ஹானிபால் இத்தாலி மீது யானைப் படைகளோடு படையெடுத்த போது, கிளேப்பியர் கணவாய் வழியாய்ச் சென்றிருக்க வேண்டும் என்பது அந்த வரலாற்று அறிஞரின் கருத்து. யானைப் படையோடுவந்த ஹானிபால் சென்ற வழியைக் கண்டு பிடிக்கவே யானையோடு அவர்கள் மலையேறுகிறார்கள்.

### தீயணைக்க

நெருப்பை வெகு விரைவில் அணைத்து விடக்கூடிய புதிய பொருள் ஒன்றை அமெரிக்கக் கடற்படை கண்டு பிடித்திருக்கிறது. இப்பொழுது உபயோகத்திலிருக்கும் மிகச்சிறந்த தீயணைப்புக் கருவிகளை விட இரண்டு மடங்கு வேகத்தில், மண்ணெண்ணெய், பெட்ரோல் முதலியவற்றினால் ஏற்படும் தீயை அணைத்து விடக்கூடியதாகும். இந்தப் புதிய பொருளின் பெயர் "பர்ப்பிள் கே. பவுடர்". ஜ்வாலையிலிருந்து பாதுகாக்கும், தீயையணைக்கும், புகைமண்டலம் இந்தப் பவுடரின் மூலம் எழுப்பப்படுகிறது. பொட்டாசியம் பைகார்பொனேட் பவுடர் இதை உண்டு பண்ணுகிறது. ஒரு விமானம் நொறுங்கியதயல் ஏற்படும் தீயைப் போல் அண்மையில் செயற்கை முறையில் எண்ணெயினால் ஏற்படுத்தப்பட்ட ஒரு தீயை இது 11 விநாடிகளில் அணைத்துவிட்டதாக கூறப்பட்டது.

---

காற்றடிக்கிற பக்கம் அது நறுமணத்தையும் சுமந்து செல்லுகிறது. கீர்த்தி காற்றையும் எதிர்த்துப் போகவல்லது. — அருள் வாக்கு.

# நிலா மிட்டாய்

'பாரதன்'



எந்தன் தம்பி சிறியவன்
இரண்டு வயது நிறைந்தவன்
சிந்தை மகிழும் முறையினில்
சிரிக்கப் பேசும் பண்பினன்!

அண்ணு பாராய் அதிசயம்!
அருமை யான அதிசயம்!
என்னால் நடந்த அதிசயம்!
எவரும் செய்யா அதிசயம்!

கூட மிட்டாய் தந்தாய்நீ!
சூப்பித் தின்ன முடியாமல்
வீசி எறித்தேன் வானத்தில்!
விளங்கு துபார் பெரிதாக!

என்று சொல்லி சிரித்தனன்!
என்னை அழைத்துக் காட்டினன்!
அன்புத் தம்பி வெண்ணிலா
அழகில் சொக்கி நின்றனன்!

உண்ணும் மிட்டாய் தன்னையே
ஒளிரும் நிலவாய் எண்ணிய
இன்பத் தம்பி அறிவையே
எண்ணி மகிழ்ந்தேன் அத்தினம்!

# கோர்ட் விளம்பரங்கள்

## சீர்காழி டி. மு. கோர்ட்
O. S. 154 | 59

Madura Bank of India by its செகரட்டரி P. S. விசுவநாதன் — வாதி

1. V. பாலம்மாள்,
2. S. S. மகாதேவய்யர் — பிரதிவாதிகள்

வாதி அட்வகேட் V. சுவேதாரண்யம் அய்யர் தெரிவிக்கிறதாவது:—

ஷை நம்பரில், வாதியால், மாயவரம் சப்கோர்ட்டு E. A. 440 | 1956 நம்பரில் ஏற்பட்டிருக்கும் சம்மரி ஆர்டர் ரத்தாக தாவா செய்யப்பட்டு, 2-ம் பிரதிவாதிக்கு சம்மன் சர்வாகாததால், ஒட்டி சர்வ்செய்ய ஆர்டராகி, 4—8—59-க்கு ஈரங்கி போடப்பட்டிருக்கிறது. ஆக்ஷேபணை இருந்தால், ஷை தேதியில் சீர்காழி டி. முன்சிப் கோர்ட்டில் ஆஜராகி தெரிவித்துக் கொள்ளலாம்.

V. Swetaranyam Iyer,
Advocate.

4 | 3086 | 93

## சீர்காழி டி. மு. கோர்ட்
மாயவரம் டி. மு. கோ.
O. S. 154 | 55

N. K. சுந்தரம் — வாதி

1. ஷண்முகம் பிள்ளை
2. முத்துகுமாரசாமி பிள்ளை
3. பதஞ்சலி பிள்ளை
4. கிருஷ்ணசாமி சசி — பிரதிவாதிகள்

ஷை நம்பரில் டிக்கிரியில் கண்ட சொத்துக்களை வசம் செய்து கொள்ளவும் டிக்கிரியில் கண்ட 1-வது ஐட்ட R. S. No. 286 | 2 நம்பரிலுள்ள சொத்தை கர்ணம் மூலம் அளந்து வசம் செய்து கொள்ளவும் ஆக்ஷேபணை நோட்டீசு மனுக்கொடுத்து நோட்டீசு 2, 3 பிரதிவாதிகளுக்கு சர்வாகாததால் ஷையார் நோட்டீசை ஒட்டி சார்வு செய்யும் படிக்கு உத்திரவாகி கெடு 11-8-59-உ போடப்பட்டிருக்கிறது. ஆட்க்ஷேபணை உள்ளவர் ஷை கோர்ட்டில் ஷை தேதியில் பகல் 10 மணிக்கு ஆஜராகி தெரிவித்துக் கொள்ளலாம் என்பதை அறியவும்.

K. Jambunatha Iyer,

## சீர்காழி டி. மு. கோ.
S. C. 72 | 1959

சீர்காழி தாலூக்கா ஷை டி. மு. லாகா கோடங்குடியிலிருக்கும் கோவிந்தசாமி ரெட்டியார் குமாரர் G. விஸ்வநாத ரெட்டியார் — வாதி

மாயூரம் தாலூக்கா சீர்காழி டி. மு. லாகா மரசலூர்வட்டம் சாத்தனூரிலிருக்கும் கோதண்டராம நாயுடு குமாரர் கோவிந்தசாமி நாயுடு — பிரதிவாதி

ஷை பிரதிவாதி - என்பவருக்கு ஷை நம்பர் வாதி வக்கீல் ஸ்ரீ K. திருவேங்கிடத்தய்யங்கார் அவர்கள் அறிவிப்பது ஷை வாதியால் பிரதிவாதி பேரில் புரோநோட்டுபடி ரூ. 395—0—0-க்கு தாவா செய்யப்பட்டு ஷை தாவாவில் பிரதிவாதிக்கு சம்மன் சர்வாகாததால் ஒட்டி சர்வு செய்யவும் பப்ளிகேஷனுக்கும் உத்தரவாகி 5-8-59-ந் தேதி கெடு குறிக்கப்பட்டிருக்கிறது. அன்று பிரதிவாதி நேரிலோ வக்கீல் மூலமாகவோ ஆஜராகி இந்த தாவாவுக்கு மறுமொழி சொல்லாவிடில் ஒருதலை பக்ஷமாக முடிவு செய்யப்படும்.

K. Thiruvengadathan,
Advocate.

7 | 3089 | 96

## குளித்தலை டி. மு. கோ.
O. S. 72/59

சொக்கலிங்கம் செட்டியார் - வாதி

சரஸ்வதி அம்மாள் வகையரு — பிரதிவாதிகள்

ஷை நம்பர் 3-ம் பிரதிவாதிக்குத் தெரிவிப்பது. ஒரு சுப்ரமணிய ஐயருக்கு A. C. நடராஜ பிள்ளையால் 6—1—48-ல் ரூபாய் 2500-0-0-க்கு எழுதிக் கொடுத்திருக்கிற ஈட்டுப்பத்திரப்படி ரூபாய் 1502-15-0 கிடைக்க ஷை பத்திரத்தை 4—1—1951-ல் மேடோவர் பெற்ற வாதியால் செய்யப்பட்டிருக்கிற தாவா 17—8—59-ல் ஈரங்கி போடப்பட்டிருக்கிறது.

வாதி வக்கீ...

## கரூர் டி. மு. கோர்ட்
S. C. 224/59

கரூர் V. மாயாண்டி செட்டியார் — வாதி

கரூர் தாலூக்கா பள்ளப்பாளையம் P. C. ஆராமுதய்யங்கார் குமாரர் P. A. ரெங்காச்சாரி — பிரதிவாதி

வாதிக்கு பிரதிவாதியால் பாண்டுப்படி ரூ. 340/-ம், செலவு வட்டி கிடைக்க தாவாசெய்து 14-8-59-ல் வாய்தா ஏற்பட்டிருக்கிறது. ஆக்ஷேபணையை தெரிவித்துக் கொள்ளவும்.

B. K. வேம்பு அய்யர்,
அட்வகேட்.

2 | 3084 | 91

## கரூர் டி. மு. கோர்ட்
O. S. 49/59

1. V. கச்சப்பன்
2. அங்கம்மாள் } மனுதாரர்கள்

1-வது மனுதாரர் சகோதரனும் 2-வது மனுதாரரின் மகனுமான இறந்து போன V. ரங்கசாமி Life Insurance Corporation of India Policy No. 11335158-ல் ரூ. 1000-0-0-க்கு Insure செய்திருக்கும் தொகை விஷயமாய் ஷை யானுக்கு வாரிசுகளான மனுதாரர்கள் Succession Certificate கிடைக்க செய்திருக்கும் மனு 12-8-59-உ வாய்தா போடப்பட்டிருக்கிறது. ஆக்ஷேபணையுள்ளவர்கள் தெரிவித்துக் கொள்ளலாம்.

எஸ். ரங்கய்யங்கார்,
ஆர். வெங்கிடாச்சாரி.

3 | 3085 | 92



## திருவையாறு டி. மு. கோர்ட்
O. P. No. 12/1959

1. மூக்கன், 2. முனியன், 3. சின்னையன், 4. மாணிக்க... — மனுதார்க...

Nil — எதிர்மனுதா...

ஷை மனுதார்கள் தெரிவிப்பது ஷை நம்பரில் இறந்த காத்தி... தோட்டம் கருப்பாயி அம்மாளுக்கு வரவேண்டிய கடன் தொகைகளை வசூல் செய்ய வார்சு சர்டிபிகேட் பெற மனுதார்களால் மனு கொடுக்கப்பட்டு 20-8-1959-... ஈரங்கி போடப்பட்டிருக்கிறது. ஆட்க்ஷேபணையுள்ளவர்கள் ஆக்ஷேபிக்கலாம்.

V. கிருஷ்ணமூர்த்தி
மனுதார்கள் வக்கீ...

6 | 3088 | 95

(2-ம் பக்கத் தொடர்ச்சி)

களிலும் பல ருசிகரமான பொருள்களைக் காண்கிறோம்.

விவசாயம் சம்பந்தமாக 2... மண்டபங்கள் உள்ளன. விவசா... உற்பத்தியைப் பெருக்குவதி... சோவியத் மக்கள் கண்டுள்ள வெ...றிகளையும், இனி வருங்காலத்தி... வேளாண்மை, கால்நடை வளர்... இவ்விரு துறைகளின் சகல பிரி...களிலும் ஏற்படவிருக்கும் வளர்...யையும் இவை எடுத்துக்காட்டுகின்றன.

"நிர்மாண வேலை" மண்ட...தில், நவ நவீன கட்டி... பொருள்களையும், இவற்றை ... பத்திசெய்வதற்கான மிகவும் மு...னேற்றகரமான தொழில் நு... முறைகளையும் கட்டிட வேலை... புகுத்தப்பட்டுள்ள இயந்திரய... முறைகளையும் சுயமியக்க சூட்...களையும் காணலாம். தொ... சாலைகளில் உற்பத்தி செய்...பட்ட "ரெடிமேட்" கட்... பாகங்களைக் கொண்டு பிரம்ம...டமான கட்டிடங்களை நிற... வேலை இங்கு செய்து காட்டப்...கிறது.

REGD No. M. 3398. SHIVAJI SUNDAY TAMIL WEEKLY. PHONE 723.



# நறுமணம்

பிரபல பத்திரிகை ஏதேனும்
ராஜா மலரைப்போன்று மணம்
னால், அது ஜப்பான் நாட்டு
க்கிய பத்திரிகைகளில் ஒன்று
று தெரிந்து கொள்ளலாம்.
னனில் இப்பொழுது ஜப்
ன் நாட்டில் வாசனைப் பத்திரி
களில் மோகம் ஏற்பட்டுள்ளது.

தேசிய வார இதழ் ஒன்று
ப்பில் ரோஜா மலரின் உரு
தைத் தாங்கி தாளெல்லாம்
மணத்தோடு வெளிவந்த
ரதே புதுவித நறுமண 'மை'
ாக்கியோ நகரின் பத்திரிகைத்
றையில் புகுந்து விட்டது.
பு வாசனையோடு கூடிய
ண்களின் உள்ளணிகள் வெளி
தன. தாம் இருக்கும் அல
ரியையே அவை வாசனையால்
ழ்கடிப்பதுடன், அன்றைக்கு
ணிவதற்காக வெளியிலெடுக்கும்
டைகளையும் மணம் கமழச் செய்
றன.

இத்தகைய நறுமண ஏடுகளும்,
சமுள்ள உள்ளாடைகளும்
ரிவந்த சமயத்தில், சற்று
ப்பும் ஏற்படத்தான் செய்
பத்திரிகைத் தொழிலில்
பாற்றுகிற ஒரு பெண்மணி,
களிலும் உள்ளாடைகளி
ள்ள மணத்தால் எல்லாத்
க்களும், பஸ்களும், ரயில்
சுகந்தத்தால் நிரம்பியிருக்
பாது அபூர்வமான உயரிய
னைத் திரவியங்கள் வைத்தி
வர்கள் தங்கள் சரக்குகளை
மக்களின் கவனத்திற்கு
ண்டுவர இயலும்?' என்று
ப்புக் குரல் எழுப்பினாள்.

த நேரத்தில் ஆண்கள்
யோகிக்கும் சவர ஸோப்
ன்ற பொருள்கள் வாசனை
வர ஆரம்பித்தன. கடைக்
கள் பேனாக்களில் வாசனை
மையை உபயோகிப்ப
நல்ல பலன் கிடைக்கும்

என்று தங்கள் வாடிக்கைக்காரர்களுக்கு உற்சாகம் ஊட்டினர். செய்தித் தாள்களில் மணத்தைப் புகுத்தியதால் வாசனைப் பூச்சுள்ள எழுதும் காகிதங்களுக்கு மதிப்புக் குறைந்தது.

இம்மாதிரி வாசனை கலந்து பத்திரிகைகள் வெளியிட்டால் அவற்றில் மீன், சீவல் போன்ற பொருட்களை எப்படி சுற்றி வைக்க முடியும் என்று வருத்தத்துடன் கேட்டார் ஒரு பொட்டலம் போடுபவர்! அத்துடன் மலர்களிலிருந்து எடுக்கப்படும் சுவைமிக்க பானங்களிலுள்ள வாசனையைப் போன்ற மணங்கமழ்ந்து வரும் பத்திரிகைகளோடு இரவு வெகு நேரம் கழித்து வீட்டிற்கு வரும் கணவர்கள் அவை தரும் மணத்தால், தங்கள் மனைவியரின் ஐயத்தைப் போக்க வேண்டியது ஒரு பெரும் பிரச்னையாகி விட்டது!

எப்போதுமே ஜப்பான் நறுமணத்தால் மூழ்கிக் கிடக்கும். அங்கு மண்டிக் கிடக்கும் வயல் வெளிகளுக்கே ஒரு தனி மணம் உண்டு. எப்போதும் பசுமை மாறாமலிருக்கும் 'காமில்லா' என்னும் ஒருவகை வெள்ளை சிகப்பு மலர்கள் அதிகாலையிலிருந்தே உள்ளம் கவரும் மணத்தைப் பரப்பும். மக்கள் பெருவாரியாக உபயோகிக்கும் சோப்புகள், வாசனைத் திரவியங்கள், கூந்தல் அலங்கார சாதனங்கள் அனைத்தும் காமில்லா மலர்களின் சென்ட்டுகளிலிருந்தே மணம் பெறுகின்றன.

மேற்கத்திய விஞ்ஞானிகளோ அல்லது அமெரிக்க விஞ்ஞானிகளோ செய்த ஏதோ ஒரு சோதனையின் விளைவாக இவ்வாண்டு காமில்லாவின் நெஞ்சையள்ளும் நறுமணம் பாதித்திருப்பதாக ஜப்பான் மக்கள் அஞ்சி கவலைப்பட்டுக் கொண்டிருக்கின்றனர். அந்த அளவுக்கு வாசமுள்ள ஒரு நறுமலர் அவர்கள் வாழ்க்கையில் ஒரு முக்கிய இடம் பெற்று விட்டது. காமில்லா மலருக்கே இவ்வளவு மதிப்பென்றால், நமது மல்லிகையும் செண்பகப் பூவும் அவர்களுக் கிடைத்தால், உணவையே மறந்து விடுவார்களே!

— பிறை

## புதிய முறை

உலோக வளங்களைக் கண்டறிவதற்கான புதிய முறை ஒன்றை சோவியத் பூபௌதிக விஞ்ஞானிகள் கண்டுபிடித்துள்ளனர். பல மைல் நீளமுடைய மின்காந்த அலைகளைப் பயன்படுத்துவதை அடிப்படையாகக் கொண்ட முறை இது. குறைவான அதிர்வுகளையுடைய ஒரு விசேஷ ஜனனி மூலம் பூமியின் பரப்பில் இந்த அலைகள் உற்பத்தி செய்யப்படும். இவை, பூமிக்கடியில் 2000 முதல் 3000 மீட்டர் ஆழத்திற்கு ஊடுருவிப் பாய்ந்து, அங்குள்ள எண்ணை, நிலக்கரி, எரிவாயு வளங்களை மிகுந்த நுண்ணிய முறையில் நிர்ணயித்துக் காட்டும்.

